J.R.B Universal Inc.
Almost All Services Available
• Personal Loans • Mortgages
• Credit Counseling • Accounting & Tax
• Scholarship Plan • Insurance Claims
• Traffic Tickets • Any Referral Service

R.R.Rajkumar
B.Com (Hons) M.B.A.
Bus: 416.752.7555 Cell: 416.937.9081
2390 Eglinton Ave. East, Unit 206B. (Kennedy & Eglinton), Scarborough

தேடல் தெரிவு தெளிவு

# தினத் தமிழ்

ThinathThamil: The Tamil Daily

April 24, 2005 | தினம்: 114 | ஞாயிறு | தமிழ்: 1 | நாளிதழ் | ஏப்ரல் 24, 2005



## கண்டி அபிவிருத்தி தொடர்கான மகாநாட்டில் கலந்து கொள்ளுமாறு சரவதேச நாடுகளுக்கு அழைப்பு

(கொழும்பு)

அடுத்த மாதம் 16ம் 17ம் திகதிகளில் கண்டியில் நடைபெறவுள்ள இலங்கையின் அபிவிருத்தி தொடர்பான மகாநாட்டில் கலந்து கொள்ளுமாறு இலங்கைக்கு உதவி வழங்கும் நாடுகள் மற்றும் சர்வதேச நிதி நிறுவனங்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது.

இதேவேளை இந்த மகாநாட்டிற்கு முன்பாக பொதுக்கட்டமைப்பு தொடர்பில் உறுதியான முடிவு ஒன்று அறிவிக்கப்படும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

இந்த மகாநாட்டுக்கான அழைப்பினை நிதி அமைச்சு உத்தியோக பூர்வமாக விடுத்தள்ளமையானது பொதுக்கட்டமைப்பு தொடர்பில் உறுதியான முடிவினை அரசாங்கம் எடுத்துள்ளதை காட்டுவதாக அரசியல் அவதானிகள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

## பொதுக்கட்டமைப்பை எதிர்ப்பது ஏன்? தூதரகங்களுக்கு ஜே.வி.பி. விளக்கம்

(கொழும்பு)

ஆழிப்பேரலை அனர்த்த நிவாரண மற்றும் மீள்கட்டுமானப் பணிகளுக்காக அரசும் விடுதலைப் புலிகள் இயக்கமும் இணைந்து உருவாக்க உத்தேசித்துள்ள பொதுக்கட்டமைப்பு தொடர்பில் தனது நிலைப்பாட்டை கொழும்பிலுள்ள அனைத்துத் தூதரகங்களுக்கும் விளக்குவதற்கு அரசின் பிரதான பங்காளிக் கட்சியான ஜே.வி.பி முடிவு செய்திருக்கிறது.

முன்னதாக தமது அரசியல் நிலைப்பாட்டை குறிப்பிட்ட சில தூதரகங்களுக்கு மட்டுமே விளக்கிவந்த ஜே.வி.பி இந்தக் கொள்கையை மாற்றி அனைத்து நாட்டுத் தூதரகங்களுக்கும் விளக்குவதென்று இவ்வார முற்பகுதியில் இடம்பெற்ற அரசியல் குழுக்கூட்டத்தில் முடிவுசெய்திருக்கிறது. உத்தேச பொதுக் கட்டமைப்புக் குறித்து தமது கட்சியின் நிலைப்பாட்டை முதன்முதலில் கொழும்பிலுள்ள இந்தியத் தூதரகத்துக்கு விளக்குவதற்கு ஜே.வி.பி முடிவு செய்திருக்கிறது. இது தொடர்பாக இந்தியத் தூதரகத்துடனான பேச்சு நேற்று கனிக்கிழமை நடைபெற்றதாக அக்கட்சியின் சிரேஸ்ட அமைச்சசொருவர் கூறினார்.

இதேபோல் அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான், சீனா மற்றும் இதர ஐரோப்பிய நாடுகளின் தூதுவர்களையும் எதிர்வரும் காலங்களில் ஜே.வி.பியினர் சந்திக்கவுள்ளனர். ஜே.வி.பியின் தலைவர் சோமவன்ச அமரசிங்க, அமைச்சர் விஜித ஹேரத் ஆகியோரே இந்த நடவடிக்கைக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டுள்ளனர்.



KMB GRANITES of America Inc.
Granite & Marble - Tiles, Slabs, Countertops, Vanities, Slate, Porcelain, Cermic, Carpet, hardwood, Fireplace, Sink
Tel: 416 • 332 • 0428 Tool Free: 1 • 800 • 819 • 6202
Fax: 416 • 332 • 1822
www.kmbgranites.com kmb@kmbgranites.com

PAT Pushpakanthan
Associate Broker
OPEN HOUSE
New Home
Markham/Steeles
3/4 Bed rooms,
3 Wash rooms

Century 21
நீங்கள் வீட்டைப் பார்வையிட
வெள்ளி, சனி, ஞாயிறு
மாலை 1:00-4:00


Dir: 416•894•1187
Visit... www.patpush.com

உங்களோடு நாங்கள்

## இக்கட்டான சூழலில் அரசு

ஆழிப்பேரலை அனர்த்த நிவாரண மற்றும் மீள்கட்டுமானப் பணிகளுக்காக அரசும் விடுதலைப் புலிகள் இயக்கமும் இணைந்து உருவாக்க உத்தேசித்துள்ள பொதுக்கட்டமைப்பு தொடர்பில் தனது நிலைப்பாட்டை கொழும்பிலுள்ள அனைத்துத் தூதரகங்களுக்கும் விளக்குவதற்கு அரசின் பிரதான பங்காளிக் கட்சியான ஜே.வி.பி முடிவு செய்திருக்கிறது.
முன்னதாக தமது அரசியல் நிலைப்பாட்டை குறிப்பிட்ட சில தூதரகங்களுக்கு மட்டுமே விளக்கிவந்த ஜே.வி.பி இந்தக் கொள்கையை மாற்றி அனைத்து நாட்டுத் தூதரகங்களுக்கும் விளக்குவதென்று இவ்வார முற்பகுதியில் இடம்பெற்ற அரசியல் குழுக்கூட்டத்தில் முடிவுசெய்திருக்கிறது. ஏற்கனவே இவ்வாறு தாம் பொதுக் கட்டமைப்பு கையொப்பம் இடப்படும் பட்சத்தில் ஒரு மணி நேரத்தில் அரசில் இருந்து விலகிச் செல்வுள்ளதாக பகிரங்கமாக அறிவித்திருந்தது. இவ்வாறான சூழ் நிலையில் அரசு எவ்வாறான நிலைப்பாட்டை எடுத்திருக்கின்றது என்பது இன்னமும் தெரியவில்லை. இது இவ்வாறிருக்க கண்டியில் இலங்கையில் அபிவிருத்தி தொடர்பான மாநாட்டில் கலந்து கொள்ளுமாறு இலங்கைக்கு உதவி வழங்கும் நாடுகளுக்கு உத்தியோக பூர்வ அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. பெரும்பாலான நாடுகள் பொதுக்கட்டமைப்பு விடையத்தில் தீர்வு காணப்படாத பட்சத்தில் தாம் இதில் கலந்துகொள்ளப் போவதில்லை என அறிவித்துள்ளன. எனவே எதிர்வரும் 16 ம் 17 ம் திகதிகளுக்கு முன்னர் முக்கியமான முடிவுகளை எட்ட வேண்டிய இக்கட்டான சூழலில் அரசு இருந்து வருகின்றது.

## தேசிய தலைவரின் வழியில் நாம் பலம்மிக்கவர்களாக பரிணமித்துள்ளோம்: கஜேந்திரன் எம்.பி

தமிழீழ தேசியத் தலைவர் அவர்களின் வழியில் நாம் ஒன்றுபட்டு பலம்மிக்கவர்களாக பரிணமித்துள்ளோம் என நாடாளுமன்ற உறுப்பினர் இ.கஜேந்திரன் தெரிவித்துள்ளார்.

யாழ்ப்பாணம் முத்திரைச் சந்தியில் அமைந்துள்ள கேணல் கிட்டு பூங்காவில் நடைபெற்ற அன்னை பூபதி அவர்களின் நினைவு நிகழ்வில் கலந்துகொண்டு உரையாற்றும் போதே அவர் இவ்வாறு தெரிவித்தார்.

அவர் மேலும் தெரிவித்துள்ளதாவது

தமிழர்கள் அனைவரும் எமது தேசியத் தலைவரின் வழியில் சென்று பலம் மிக்கவர்களாக சர்வதேச மட்டத்தில் பரிணமித்துக்கொண்டு இருக்கின்றோம்.

இன்று நாம் பலம் பொருந்தியவர்களாக இருப்பதனால் சர்வதேச சமூகம் எம்மை ஏற்றுக் கொண்டுள்ளது. அத்துடன் எமது குரலுக்கும் மதிப்பளிக்கும் நிலையும் ஏற்பட்டுள்ளது. எமது கோரிக்கைகளுக்கு சர்வதேசத்தின் பார்வையும் கூட சாதகமாக மாறிக்கொண்டு வருகின்றது.

அத்துடன் இந்தியப் படைகள் தமிழர் தாயகத்தில் நிலைகொண்டு இருந்தபோது நாம் அகிம்சை வழியில் போராட்டங்களை முன்னெடுத்தோம். காந்தியத்தின் நாடெனவும், சத்தியத்தின் குரலெனவும் கூறப்படும் இந்திய நாடு எமது சாத்வீக போராட்டங்களுக்கு மதிப்பளிக்காமையினாலேயே நாம் தியாகி திலீபனையும், தியாகி அன்னை பூபதி அவர்களையும் இழக்க வேண்டியேற்பட்டது.

இந்திய அரசு சாத்வீகப் போராட்டத்திற்கு மதிப்பளிக்காது துரோகம் இழைத்துவிட்டது. இதனால் நாம் தியாகி திலீபன், அன்னை பூபதி போன்றவர்களைச் சாத்வீக வழியில் இழக்கவேண்டிய நிலைக்கு இட்டுச் செல்லப்பட்டோம். நாம் எமது சொந்தக்காலில் நின்றே எமது விடுதலையை வென்றெடுக்க வேண்டும் என்பதை தியாகி திலீபன், அன்னை பூபதி அவர்களின் இழப்புக்கள் எமதுக்கு உணர்த்திச் சென்றன எனவும் தெரிவித்தார்.

## சிறீலங்கா-இந்திய படைகள் ஏற்படுத்திய அழிவுகளுக்கு நிகராக ஆழிப்பேரலையும் அழிவினை ஏற்படுத்தியுள்ளது: அருண் மாஸ்ரர்

சிறீலங்காப் படைகளாலும் இந்தியப் படைகளாலும் தமிழ் மக்கள் சந்தித்த அழிவுகளுக்கு நிகராகவே ஆழிப்பேரலையும் தமிழர் தாயகத்தில் பேரழிவுகளை ஏற்படுத்தியுள்ளது என்று தமிழீழ கல்விக் கழக துணைப்பொறுப்பாளர் அருண் மாஸ்ரர் தெரிவித்துள்ளார்.

கிளிநொச்சி அழகியல் கலாமன்ற மண்டபத்தில் ஆழிப்பேரலையால் பாதிக்கப்பட்ட முல்லைத்தீவு, வடமராட்சிக் கிழக்கு பகுதிகளைச் சேர்ந்த ஆசிரியர்களுக்காக நடத்தப்பட்ட நாடக அரங்க பட்டறையின் நிறைவு நிகழ்வில் இன்று (23.04.2005) கலந்துகொண்டு உரையாற்றும் போதே அவர் இவ்வாறு தெரிவித்தார்.

அவர் மேலும் தெரிவித்ததாவது:-

தமிழ்மக்கள் கடந்த 25 ஆண்டுகளுக்கு மேலாக போரினால் பெரும் அழிவுகளைச்

இம் மாத நடப்புகள்

சுனாமியால் பாதிக்கப்பட்ட உறவுகளின் துயர் துடைக்க
ஈர விழிகள்
ஏப்ரல் 24, ஞயிறு
5:00 PM
கனடா கந்தசுவாமி கோவில்
733 Birchmount Road
(Birchmount / Eglinton)

மூலிகை வைத்தியம் HERBAL TREATMENT

- கனடாவில் 12 வருடங்களுக்கு மேலாக வைத்தியம் செய்யும் ஒரேயொரு மூலிகை வைத்திய நிபுணர்.
- தேங்காயில் நேரடியாகக் கொலஸ்ரோல் இல்லையென்று கனடாவில் ஆய்வு செய்து நிரூபித்த டாக்டர்.
- உங்கள் வியாதி எதுவாக இருந்தாலும் முதலில் தொலைபேசி மூலம் இலவசமாக கலந்தாலோசியுங்கள், வைத்தியம் செய்தல்பற்றி பின்பு நீங்கள் தீர்மானியுங்கள்

புதிய இடத்திற்கு மாறியுள்ளதால் தயவு செய்து தொலைபேசி இலக்கத்தை கவனியுங்கள்:
905·209·9464
416·625·3290

Dr. N.M. Kumar
MBBS,CNHP, Canada
Herbalist



(2 ம் பக்கத் தொடர்சி)

சந்தித்துள்ளனர். சிறீலங்கா, இந்தியப் படைகளாலும் பெரும் அழிவுகளையும் உயிரிழப்புக்களையும் சந்தித்துள்ளனர்.

நீண்ட காலமாக நடைபெற்ற போரின் ஒரு திருப்பமாக ஏற்பட்ட அமைதிச் சூழல் மூன்று ஆண்டுகளை எட்டிய நிலையில் இயற்கை அனர்த்தம் ஆழிப்பேரலை என்ற பெயரில் தமிழர் தாயகத்தில் பெரும் உயிரிழப்புக்களையும் பொருளாதார அழிவுகளையும் ஏற்படுத்தியுள்ளது.

போரினாலும் ஆழிப்பேரலையாலும் ஏற்பட்ட தாக்கங்களை மக்கள் மனங்களில் இருந்து அகற்ற வேண்டிய பணி எல்லோர் மத்தியிலும் உள்ளது. அந்த வகையில் ஆழிப்பேரலை தாக்கம் ஏற்பட்ட பகுதிகளில்

இருந்து தெரிவு செய்யப்பட்ட ஆசிரியர்கள் மத்தியில் இவ் அரங்கப்பட்டறை நடத்தப்படுவது பாராட்டுக்குரியது என்றார்.

முன்னாள் வடக்கு கிழக்குப் மாகாண கல்விப் பணிப்பாளரும் தற்போதைய ஜேர்மன் உதவி நிறுவனமான **(GTZ)** யின் நிர்வாக ஆலோசகருமான க.கந்தசாமி தலைமையில் நடைபெற்றது.

இந்நிகழ்வின் ஆரம்பத்தில் தமிழீழ தேசியக்கொடியினை தமிழீழ கல்விக் கழகப் துணைப் பொறுப்பாளர் அருண் மாஸ்ரர் ஏற்றிவைக்க, அழகியல் கலாமன்ற கொடியினை அதன் அதிபர் க.விஜயசேகரன் ஏற்றிவைத்தார்.

கருத்துரைகளை அரங்க செயற்பாட்டுக் குழுவைச் சேர்ந்த செ.விந்தன், முல்லைத்தீவு வலயக் கல்விப் பணிப்பாளர் ப.அரியரட்ணம், கிளிநொச்சி வலய கல்விப் பணிப்பாளர் த.குருகுலராஜா ஆகியோர் நிகழ்த்தினர்.

தொடர்ந்து அரங்கப் பட்டறையில் கலந்துகொண்ட ஆசிரியர்களினால் ஆற்றுகை ஒன்று நிகழ்த்தப்பட்டதுடன், அரங்கப் பட்டறையில் கலந்துகொண்ட ஆசிரியர்களுக்கு சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

இவ் அரங்க பட்டறையினை **(GTZ)** யின் ஏற்பாட்டில் அரங்க செயற்பாட்டுக்குழு கிளிநொச்சி அழகியல் கலாமன்றம் என்பன

நடத்தி இருந்தன.

### தென்மராட்சிப் பகுதிகளில் படையினர் ரோந்து

யாழ். தென்மராட்சிப் பகுதிகளில் சிறீலங்காப் படையினரின் ரோந்து நடவடிக்கைகள் பலப்படுத்தப்பட்டு வருகின்றன.

தென்மராட்சி சாவகச்சேரியின் பிரதான வீதிகளில் குறிப்பாக ஏ-9 நெடுஞ்சாலையை அண்டிய பகுதிகளில் பெருமளவிலான சிறீலங்காப் படையினர் ரோந்து நடவடிக்கைகளில் அண்மைய நாட்களாக ஈடுபட்டு வருகின்றனர்.

படையினரின் இத் திடீர்ச் செயற்பாடு போர்க்காலத்தை நினைவு படுத்தும் வகையில் அமைந்துள்ளதால் மக்கள் அச்ச நிலைக்கு உள்ளாகியுள்ளனர்.

இதனை விட சாவகச்சேரி மீசாலை புத்தூர் சந்திப் பகுதியில் அமைந்துள்ள சிறீலங்காப் படை நிலைகளையும் புனரமைத்து வருகின்றனர்.

சாவகச்சேரிப் பகுதியில் சிறீலங்காப் படை வாகனம் மோதி குடும்பஸ்தர் ஒருவர் படுகாயமடைந்ததைத் தொடர்ந்து அப்பகுதியில் மக்களுக்கும் படையினருக்கும் இடையிலான முறுகல் நிலை ஏற்பட்டிருந்தது.

இதனை அடுத்து அப்பகுதியில்

சிறீலங்காப் படையினரும், பொலிசாரும் குவிக்கப்பட்டனர்.

இருப்பினும் தற்போது பெருமளவு படையினர் திடீரெனக் குவிக்கப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

### நீரிறைக்கும் இயந்திரங்கள் வழங்கப்பட்டன

மட்டக்களப்பு வாகரை பிரதேசத்தில் தியாகி அன்னை பூபதியின் 17 ஆம் ஆண்டு நினைவு நாளினை முன்னிட்டு தமிழீழ பொருண்மிய மேம்பாட்டு நிறுவன கிராமிய வங்கியினால் மேட்டுநிலப் பயிர்ச் செய்கையினை மேற்கொள்வதற்கென நீரிறைக்கும் இயந்திரங்கள் வழங்கப்பட்டுள்ளன.

வெருகல் கிராமிய அபிவிருத்தி வங்கி மேலாளர் க.ஸ்ரனிஸ்ற் தலைமையில் நடைபெற்றது.

இந்நிகழ்வில் திருமலை மாவட்ட அரசியல் துறைப் பொறுப்பாளர் எழிலன், திருமலை மாவட்ட அரசியல் துறை மகளிர் பொறுப்பாளர் காருண்யா, ஆண்டாங்குளம் கோட்ட தளபதி அறிவு, வாகரை ஈச்சிலம்பற்று மூதூர் பிரதேச அரசியல் துறைப் பொறுப்பாளர் செம்மனன் ஆகியோர் கலந்துகொண்டு நீரிறைக்கும் இயந்திரங்களைப் விவசாயிகளுக்கு வழங்கியுள்ளனர்.


வெளியீடு:
தினத்தமிழ் பதிப்பகம்
ஆசிரியர் பீடம்:
416•712•8841
விளம்பரம்:
416•831•6804
விநியோகம்:
647•668•8867
இணையத்தளம்:
www. thinaththamil.com
மின்னஞ்சல்:
info@ thinaththamil.com
Graphic Consultant:
JAYA Creative Solutions
Printer:
VIVEKA Printers

10,000 இதழ்கள்
Circulation 10,000




இப் பத்திரிகை மீள் உபயோகத் தாளில் அச்சிடப்படுகிறது.

10-20 mm மழை பெய்யும் என எதிர்பாக்கப்படுகின்றது

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் |
|---|---|---|---|
|  High: 9 Low: 1 |  High: 7 Low: 2 |  High: 11 Low: 3 |  High: 13 Low: 2 |


ஒவ்வொரு குழந்தையும் தனித்துவமானது. அவர்தம் ஆற்றலும் தனித்துவமானதே.

உங்கள் பிள்ளைகளும் கல்வியில் ஓங்கிட, நாளைய உலகின் சவால்களை வென்றிட...

(416) 777-9-888
Centres in Scarborough and Mississauga

கனேடிய பாடத்திட்டத்தை முற்றிலும் கணனி ஊடாக தேர்ச்சி பெற்ற ஆசிரியர்களின் துணையுடன் கற்பிக்கும் ஒரே நிறுவனம்

Guaranteed results*

பல வருட ஆராய்ச்சியின் பயன் பிரத்தியேக சவாலூட்டும் பயிற்சிகள்

Math & English for Kindergarten to Grade 8




Computer-Based Education Centres

## சன் ரிவியின் கதை

இந்தியாவில் எத்தனையோ தொலைக்காட்சிகள் இருக்கின்றன இந்தியாவிற்கு வெளியிலும் எத்தனையோ தமிழ் தொலைக்காட்சிகள் இருக்கின்றன இருந்த போதுக் உலகில் தற்போது முன்னிலையில் நிற்கும் தமிழ் தொலைக்காட்சி சன் ரிவி என்பதை யாரும் மறுத்துவிட முடியாது இந்த நிலையை சன் ரிவி எட்டியது எவ்வாறு? சன் ரிவி எவ்வாறு ஆரம்பிக்கப்பட்டது? போன்ற விடையங்களை ஆராய்வதன் மூலமும் அதன் தனித்துவத்தை அறிந்து கொள்வதன் மூலமும் நாம் ஒரு ஊடகத்தின் வழர்ச்சியையும் அதன் நுணுக்கங்களையும் அறிந்துகொள்ளமுடியும்.

1990 ம் ஆண்டு ஸ்ரார் மற்றும் ஜி தனியார் தொலைக்காட்சிகள் இந்தியாவைக் கலக்கிக்கொண்டிருந்த போது பூமாலை என்னும் காட்சிப்பத்திரிகையாக ஆரம்பிக்கப்பட்டது. தொடர்ந்து 1993ம் ஆண்டு தினமும் 3 மணிநேரம் சன் ரிவி ஒளிபரப்பப்பட்டது. இன்று 24 மணிநேரம் ஒளிபரப்பாகிக்கொண்டிருக்கும் இத்தொலைக்காட்சி இந்தியாவில் தமிழில் மட்டுமல்ல தெலுங்கு மலையாளம் என தென்இந்திய மொழிகளிலும் சிறந்து விழங்குகின்றது.

அமெரிக்க முன்னாள் ஜனாதிபதி பில் கிளிங்டன் இந்தியா சென்றிருந்தபோது இந்தியாவில் அவர் சந்தித்தவர்களில் ஒருவர் கலாநிதிமாறன். இதற்குக் காரணம் சண் ரிவியே ஆகும்.

இவ்வாறு சக தமிழ் தொலைக்காட்சிகளுடன் ஒப்பிடும்போது மக்களிடையே பெரும் வரவேற்பை பெற்றிருப்பதற்கு முதலில் அறிமுக மானதும் ஒரு காரணமாக இருந்த போதும் அதனைத் தக்கவைப்பதற்கு அவர்கள் தொடர்ந்து நடத்தும் போராட்டமே அத் தொலைக்காட்சியின் சிறப்பு எனலாம். புதிதாக வெளிவந்த திரைப்படங்கள் வித்தியாசமான தொழில்நுட்பத்தோடு தொடர்கள் செய்திகள் என தினந்தினம் வித்தியாசமான பல் சுவை நிகழ்ச்சிகள் மூலம் மக்களின் மனங்களைக்கவர்ந்திழுக்கின்றார்கள். தொலைக்காட்சி என்பது ஓர் பொழுது போக்கு ஊடகம் மக்களை மகிழ்விக்கக் கூடயதான பல அம்சங்களைச் சேர்த்துக் கொள்வதன் மூலமே மக்களைக் கவரமுடியும் என்பதை சரியாகப் புரிந்து வைத்திருக்கிறார்கள் இதுவே இவர்களின் வெற்றியின் இரகசியம். சன் ரிவியின் வெற்றி தொடர்பாக இதன் ஸ்தாபகர் கலாநிதிமாறன் கருத்துத் தெரிவிக்கும்போது. தன்னுடன் பணிபுரியும் கீழ்நிலை ஊழியர்களில் இருந்து உயர்நிலை அதிகாரிகள் வரை அனைவரின் ஒத்துளைப்பும் ஆதரவும் தான் காரணம் என்றார். சன் ரிவியை முதலில் ஆரம் பித்த இவரது நண்பர்களே இப்போதும் இதனை நிர்வதித்து வருகின்றார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

கருணாநிதியின் அரசியல் பலம் ஒருகாலத்தில் பின்புலமாக இருந்தது என சிலர் கூறினாலும் மக்கள் மத்தியில் சிறப்பான நிகழ்ச்சிகள் மூலம் இடம்பிடித்தவர்கள் என்பது தான் உண்மை. ஏன் எனில் அரசியல் ரீதியாக தற்போது பெரும் செல்வாக்கு நிறைந்தவரான ஜெயலலிதாவின் ஜெயா ரிவி தமிழ் நாட்டில் சன் ரிவிக்கு போட்டியாகவே ஆரம்பிக்கப்பட்டதாக எல்லோராலும் கருதப்படுகின்றது. இருந்தபோதும் சன் ரிவியின் மக்கள் ஆதரவை அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லையே இதற்கான காரணம் என்ன? மக்கள் மத்தியில் வரவேற்பை பெறக்கூடிய நிகழ்ச்சிகளை சண் ரிவிக்கு இணையாக இவர்களால் கொடுக்க முடியவில்லை என்பது தான் உண்மை. தமிழ்நாட்டு அரசியலில் தற்போதைய முடிசூடா மன்னன் என்று சொல்லக்கூடிய கருணாநிதியின் தமிழ் பற்றுதலின் வெளிப்பாடால் முளைத்த தமிழ்ப் படங்களுக்கு தமிழ்ப்பெயர்தான் வைக்கவேண்டும் என்ற கூற்று இன்று உலகம் முழுவதும் ஒலித்துக்கொண்டாலும் அவரின் குடும்பச்சொத்தான சன் ரிவிக்கு தமிழ்ப்பெயர் வையுங்கள் என்று ஒருவரும் கேட்காதது வேடிக்கைதான்.

**ERAA CD & GIFT market**
2607 Eglinton Ave., Unit 1 Scarborough
Tel: 416•269•1716

JAY'S
PROFESSIONAL TRUCK TRAINING CENTRE

• Approved By Ministry Of Transport, Ontario (MTO)
• Approved As A Private Career College From Ministry Of Training Colleges Universities, Ontario

கனரக வாகனங்களுக்கான
சாரதி அனுமதிப் பத்திரம்
A, B, C, D & Z
• Fully Licensed, Qualified Instructors
• Professional Training Facility
• Lessons Available in Tamil & English
• Free Training for E.I Recipients
• Easy and Speedy Training
• Low Cost
Bus: 416•299•9638
Cell: 416•771•8041
Fax: 416•609•9814
589 Middlefield Rd., Unit 11
Scarborough, Ont. M1V 4Y6
e:jaystruck@bellnet.ca www.jaystrucktraining.com



Lowfare
travels and tours
உங்கள் பயண ஒழுங்குகளுக்கு...

Lavan J.Vaithilingam
Travel Consultant

LOWFARE TRAVELS AND TOURS INC.
2607 Eglinton Ave East Second Floor
Scarborough Ontario M1K 2S2 Canada
Phone: (416) 261 0555
Fax: (416) 261 9948
lavan@lowfaretravels.ca www.lowfaretravels.ca



Anjappar Chettinad
South Indian Cuisine
3090 Eglinton Ave, East Scarborugh, Ont. M1J 2H1
Tel: 416-265-2695 Fax: 416-265-4990


## தமிழ் தேசிய ஒளிபரப்புக் கூட்டுத்தாபனத்திற்கு ஆட்திரட்டல்

தமிழ் தேசிய ஒளிபரப்புக் கூட்டுத்தாபனத்தினருக்கான ஆட்திரட்டலில் தமிழீழ விடுதலைப்புலிகளின் நிதர்சனப்பிரிவினர் தமிழர் தாயகப் பிரதேசம் எங்கும் பெரும் எடுப்பில் ஈடுபட்டு வருகின்றனர். செய்தியாளர்கள் முதல் ஒளிபரப்பாளர்கள் வரையிலானோரை உள்வாங்கும் திட்டத்திடனுடனேயே இவ் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுவருகிறது. இவ் ஒளிபரப்புத் திட்டமானது செயற்படத்தொடங்கி சிறிது காலத்திலேயே உலகறிந்த ஒரு ஒளிபரப்புக் கூட்டுத்தாபன-மாக செயற்பட்டு வரும் இது மேலும் தன்னை வளர்த்துக் கொள்ளும் நோக்குடனேயே தாயகப் பிரதேசம் எங்கும் ஆட்சேர்க்கும் பணியில் ஈடுபட்டு வருகின்றது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது

## பயங்கரவாத தடுப்பு பிரிவு அதிகாரி காணமல் போன சம்பவம் தொடர்பில் மேலதிக தகவல்கள்

இலங்கை காவல்துறையின் பயங்கரவாத தடுப்ப பிரிவின் முக்கியஸ்தரான ஜெயரட்ணம் காணமல் போன சம்பவம் தொடர்பில் மேலதிக தகவல்கள் வெளியாகியுள்ளன.
அண்மை நாட்களில் அவருக்கு கொலை அச்சுறுத்தல் விடுக்கப்பட்டு வந்ததாகவும் இதனை அடுத்து அவர் விசேட நடவடிக்கை பிரிவின் தலைமையகத்திற்கு மாற்றப்பட்டிருந்தார் என்றும் தெரிவிக்கப்படுகின்றது.

கடந்த 20ம் திகதி இரவு மனோ மற்றும் ரட்ணம் ஆகிய இருவருடனும் உரையாடியதாகவும் அவர்களுடனேயே அவர் சென்றதாகவும் ஜெயரட்ணத்தின் மனைவி குறிப்பிட்டுள்ளார்.
இவர்கள் குறித்து தான் ஏற்கனவே அறிந்திருக்கவில்லை என்றும் அவர் தெரிவித்தார்.

## விடுதலைப் புலிகளின் உதவியாளர் மீது தாக்குதல்

கோமாரி அகதி முகாமில் வைத்து நேற்று வெள்ளிக்கிழமை பிற்பகல் விடுதலைப் புலிகளின் உதவியாளர் ஒருவர் விஷேட அதிரடிப்படையினரால் தாக்கப்படடுள்ளார். இவரை எதுவித காரணமும் இன்றி அதிரடிப்படையினர் கடுமையாக தாக்கிய-தாக போர்நிறுத்தக் கண்காணிப்பு குழுவிடம் முறைப்பாடு செய்யப்பபடடுள்ளது.

பொத்துவில், உடும்பன்குள புலிகளின் அலுவலகத்தைச் சேர்ந்த சந்திரன் என்பவரே தாக்கப்பட்ட விடுதலைப் புலிகளின் உதவியாளர் ஆவார். அதிரடிப் படையினரின் தாக்குதலால் இவரின் தலையில் காயமேற்பட்டுள்ளது.

## பொதுக்கட்டமைப்பு ஏற்படுவதை இந்தியா தடுத்து நிறுத்தவேண்டும் - சங்கரி

இலங்கை இன விவகாரத்தில் தலையிடாத போக்குக்காக இந்தியா எதிர்காலத்தில் வருந்தவேண்டிய நிலை ஏற்படும் எனத் தமிழர் விடுதலைக் கூட்டணியின் தலைவர் ஆனந்தசங்கரி தெரிவித்துள்ளார். இலங்கை இனப்பிரச்சினையில் இந்தியா உடனடியா-கத் தலையிடவேண்டும் என இந்திய அரசுத் தலைவர்களிடம் கோரிக்கை விடுத்துள்ளதாகவும் தற்போது சர்வதேச நாடுகள் விடுதலைப்புலிகளுக்கு ஆதரவான நிலைப்பாட்டைக் கொண்டுள்ளது. இது இந்திய நலன்களுக்குப் பாதகமாக அமையுமென தான் இந்திய அரசியற் தலைவர்களுக்கு விளக்கிக் கூறியதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.
அரசாங்கம் பொதுக்கட்டமைப்பு ஒன்றை ஏற்படுத்துவதற்கு முன்பாக இந்தியா தலையிட்டு, இதைத் தடுத்து நிறுத்தவேண்டும் என்றும் பொதுக்கட்டமைப்பு உருவாக்கப் படுமானால், அதன் பின்னர் எதையும் செய்யமுடியாத நிலை ஏற்படும் என்றும் ஆனந்தசங்கரி தெரிவிக்கிறார்.

இதேவேளை இந்தியப் புலனாய்வுத் துறையால் உருவாக்கப்பட்டுள்ள விடுதலைப் புலிகளுக்கு எதிரான கூட்டமைப்பின் தலைவராக நியமிக்கப்பட்டுள்ள ஆனந்தசங்கரியிடம் விடுதலைப் புலிகளுக்கு எதிரான நடவடிக்கைகளை எவ்வாறு மேற்கொள்வது என்பது குறித்து இந்திய அதிகாரிகள் தெளிவுபடுத்தியுள்ளதாகத் தெரியவருகிறது.



JET TRAVELS
Mr.Sivam


4429 Sheppard Ave.E.
Scarborough, Ont. Tel 416 291 0177
M1S 1V3 E-mail:jettravels@on.aibn.com

祥記牛腩粥麵家
King's Congee & Noodle House
தமிழ் மக்களின் நன்மதிப்புப் பெற்ற Chinese உணவகம்
Tel: (416) 298-2081
Open from 4:00 PM 5:00 AM
4192 Sheppard Ave. East
Scarborough, Ontario M1S 1T3

நவீன, பாரம்பரிய நகைகள்
சிவசக்தி நகை மாளிகை
Sivasakthi Jewelley
Tel: 416•267•4141 | Fax: 416•264•0001
2607 Eglinton Ave. East, Scarborough, ON. M2K 2S2

ROGERS Cable
ROGERS HI-SPEED INTERNET
Hi-Speed Internet (First 6 months $29.95)
Cable (no connection fee)
Tamil Vision(Tvi) (First month half price)
Please call S.Sunthar
4465 Sheppard Ave. East, Unit # 37A
Scarborough, Ontario
416 473 0058
416 289 2082

Chola Caterer's
Sri Lankan & South Indian Cuisine
அறுசுவை
தரம்
சுத்தம்
துரிதம்
1217 Ellesmere Rd., Scarborough, Ont (Midland & Ellesmere)
416 • 288 • 9339

Nathan Sritharan
Barrister & Solicitor, Notary Public
உங்கள் சட்டப்பிரச்சினைகளுக்கு....
Tel: 416•499•2760
Fax: 416•499•6534
2190 Warden Ave. Suite 208
Scarborough, On. M1T 1V6

WORLD NET COMPUTERS INC.
Tel: 905•472•3730
www.wnci.ca
SALES - SERVICE - UPGRADE
PENTIUM 4 FROM $425 17" LCD MONITOR $319.
50 CD PACK $9.99
7200 Markham Road, Unit12 (Markham & Denison)

## புலனாய்வுப் பிரிவுப் பணிப்பாளராக பிரிகேடியர் ரிஸ்வி ஷக்கி நியமனம்

இராணுவ புலனாய்வுத்துறையின் இயக்குனராக பிரிகேடியர் ரிஸ்வி ஷக்கி நியமிக்கப்பட்டுள்ளார். இராணுவப் புலனாய்வுத்துறையின் இயக்குனராக இருந்த மேஜர் ஜெனரல் கபில ஹொந்தவிதாரண, முப்படைகளையும் உள்ளடக்கிய பாதுகாப்பு புலனாய்வுத்துறையின் பணிப்பாளர் நாயகமாக பதவியுயர்வு பெற்றுச் சென்றதை அடுத்தே இந்தப் பதவிக்கு பிரிகேடியர் ஷக்கி நியமிக்கப்பட்டுள்ளார். நீண்டகாலமாக மட்டக்களப்பு மாவட்ட இராணுவ இணைப்பதிகாரியாக இருந்த பிரிகேடியர் ஷக்கி, பின்னர் பாகிஸ்தானிலுள்ள இலங்கைத் தூதரகத்தில் பாதுகாப்பு ஆலோசகராகக் கடமையாற்றி வந்தார். இவருக்கான நியமனத்தை ஜனாதிபதி சந்திரிகா வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கது.

## இந்த ஆண்டிற்குள் ஜனாதிபதித் தேர்தல் ஒன்று நடத்தப்பட வேண்டும் - ஐ.தே.க



இந்த ஆண்டிற்குள் ஜனாதிபதித் தேர்தல் ஒன்று நடத்தப்பட வேண்டும் என ஐக்கிய தேசிய கட்சி வலியுறுத்தியுள்ளது. கொழும்பில் நடைபெற்ற ஊடகவியலாளர் சந்திப்பில் கருத்து வெளியிட்ட ஐக்கிய தேசிய கட்சியின் பேச்சாளர் பேராசிரியர் ஜீ.எல்.பீரிஸ் இதனை தெரிவித்தார். அரசாங்கத்திற்குள் நிலவும் உள் முரண்பாடுகள் தீர்க்கப்பட முடியாத நிலையினை நெருங்கிக் கொண்டிருப்பதால் பாராளுமன்றத்தை கலைத்து விட்டு மீண்டும் ஒரு தேர்தலை நடத்துவதற்கு ஜனாதிபதி ஆலோசித்து வருகின்றார்.

பாராளுமன்ற தேர்தல் ஒன்று நடத்தப்படால் அதனை ஐக்கிய தேசிய கட்சி எதிர்கொள்ள தயாராக இருப்பதாகவும் பீரிஸ் தெரிவித்துள்ளார்.

தற்போதுள்ள நிலையில் இந்த ஆண்டிற்குள் ஜனாதிபதித் தேர்தல் ஒன்று நடத்தப்பட வேண்டும் என்பதே ஐக்கிய தேசிய கட்சியின் நிலைப்பாடு என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## உள்முரண்பாடுகளால் ஈபிடிபி கட்சிக்குள் பிளவு: பிரிந்து சென்றார் சங்கர்

ஈ.பி.டி.பி முக்கியஸ்தரும் மத்திய குழு உறுப்பினருமான குணசேகரம் சங்கர் தான் அந்த அமைப்பில் இருந்து விலகியுள்ளதாக அறிவித்துள்ளார். ஜனநாயகம் குறித்து பேசிக் கொண்டே ஈ.பி.டி.பி மிக மோசமான ஜனநாயக மறுப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருவதாகவும் ஈ.பி.டி.பியின் இந்த ஜனநாயக விரோத போக்கினை அனைவருக்கும் தெளிவுபடுத்தும் வரை தான் ஓயப் போவதில்லை என்றும் குணசேகரம் சங்கர் தெரிவித்துள்ளார். ஈ.பி.டி.பி மத்திய குழுவில் உள்ள 9 பேரில் மூன்று பேர் ஒரு குழுவாகவும் ஏனையவர்கள் மற்றொரு குழுவாகவும் செயல்படுவதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

கட்சிக்குள் ஜனநாயகம் இல்லை என்றும் சுயலாப அரசியல் மற்றும் சர்வாதிகார போக்கு என்பன அங்கு மலிந்துள்ளதாகவும் அவர் தெரிவித்துள்ளார்.

இதேவேளை சங்கர் குணசேகரம் நிர்வகித்து வந்த மரமுந்திரிகை கூட்டுத்தாபனத்தின் பணிப்பாளர் பதவிக்கு அமைச்சர் டக்ளஸ் தேவாநந்தாவின் முக்கிய விசுவாசிகளில் ஒருவரான எஸ்.தவராஜா என்பவர் நியமிக்கப்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது. குணசேகரம் சங்கரை பதவி விலக்கியுள்ளதாகவும் அவருடைய இடத்திற்கு தவராஜா நியமனம் செய்யப்பட்டுள்ளதாகவும் அமைச்சு அறிவித்துள்ளது.





We Wanted the Best Mortgage...

... and we got it!

4.75% for 5 years

• One Call • More Choices • Reliable Results• Peace of Mind



குறைந்த வட்டிவீதத்தில் உங்கள் வீட்டுக்கான மோட்கேஜ் பெற்றுக்கொள்ள அழையுங்கள்..

Call Shanjith SATKUNANANTHAN today!

647·893·5450
416·282·3727

or apply online at www.tmacc.com/shanjithsatkunananthan




200-2005 Sheppard Ave. East, Toronto, ON M2J 5B4
Toll Free 1 877 366 3487



UTEL UTEL Simply Connect
Home & Business Long Distance Service

இதுவொரு தொலைபேசி அட்டை அல்ல

தொலைபேசி அட்டைகளால் உங்களுக்குத் தொல்லையா? கவலையை விடுங்கள் இதோ உங்கள் வீடுநோக்கி வருகிறது home long distance service

Sri Lanka - 0.15/min.

India (from) - 0.14/min.

Canada/USA/UK - 0.025/min.

- No Connection Fee
- No Service Fee
- No maintanance Fee
- No Monthly Charge
- Not a phone Card

CALL From Your:
Home Phone · Cell Phone · Work Phone · Public Phone



More Info:
416.831.6804 / 416.732.6377
www.utel.ca

# சோதிடம்


**மேடம்:** மனக்கஸ்ரம் பணவரவு பொருட்சேதம்
அதிஸ்ட எண்:3


**துலாம்:** புத்திரரால் நற்பெயர் பணவரவு தொழில் சிறப்பு
அதிஸ்ட எண்:1


**இடபம்:** பெரியோர் நன்மதிப்பு இனசன கொண்டாட்டம்.
அதிஸ்ட எண்: 9


**விருச்சிகம்:** மனக்கவலை பொருள் வரவு உறவினர் வருகை
அதிஸ்ட எண்: 3


**மிதுனம்:** காரிய சித்தி தொழில் சிறப்பு பணவரவு
அதிஸ்ட எண்: 1


**தனுசு:** பொருள் விரையம் மனக்கஸ்ரம் முற்கோபம்
அதிஸ்ட எண்:8


**கடகம்:** மனச்சஞ்சலம் பணவரவு தொழிற்சிறப்பு
அதிஸ்ட எண்: 4


**மகரம்:** காரிய சித்தி வீண்வாக்குவாதம் பொருள்வரவு
அதிஸ்ட எண்: 7


**சிங்கம்:** மனக்கஸ்ரம் உடல் நலக்குறைவு பெரியோர் நன்மதிப்பு
அதிஸ்ட எண்:3


**கும்பம்:** உடல் நலக்குறைவு பணவரவு பிடிவாதம்
அதிஸ்ட எண்: 8


**கன்னி:** குடுப்பத்தில் வீண்வாக்கு வாதம் இனசன கொண்டாட்டம்
அதிஸ்ட எண்: 6


**மீனம்:** பொருள் வரவு காரிய சித்தி மனக்கவலை
அதிஸ்ட எண்: 9

**by:SVKRK JOTHISHAM**

நாங்கள் கனடாவில தமிழ்
வழக்கோணும் பாருங்கோ.........
உதுக்கு என்ன செய்யலாம் எண்டு
நீங்கள் நினைக்கிறீங்கள் ஏதாவது
ஐடியா தாங்கோவன் எப்பிடி தமிழ்
வழக்கலாம் .........................
ம்ம்ம்ம்ம்ம்ம்ம்
தமிழ்ப் பாடசால கட்டுவமோ......
சீ........... பொடியள் இருக்கிற
பாடசாலைக்கே போகுதுகள்
இல்ல....உதுக்குள்ள
புதுசாக்கட்டியே போகப்போகுதுகள்
உது பொய்வேல...........
அப்ப என்ன செய்யலாம்?
தமிழில பிரச்சாரக் கூட்டம் ஏதாவது
வைப்பமே................... அதுக்கும்
பொடியள் வந்திற்று இடையில
எழும்பிப் போயிரும்..........எனக்கு
மைக்கெண்டா நல்ல
விருப்பமெல்லே அது தெரியாது
பொடியளுக்கு
ம்ம்ம்ம்

அப்ப என்ன
செய்யலாம்?
நல்ல
ஐடியா

ஒண்டும் வருகுதில்ல பாருங்கோ
கனடாவில தமிழ வழப்பம் எண்டு
பாத்தா ஏலாது போல கிடக்கு
உங்க இருக்கிறவைய கூப்பிட்டு
மாலையள் மரியாதையள் ஏதாவது
போட்டு தமிழ் விழா எடுப்பமோ?
அதுக்கும் மால வாங்கிறவை
மட்டும் தானே
வருவினம்...மற்றவையள்
சொல்லுவினம்மாலை விழுந்த
மரியாதைக்குரியவர் யாரெண்டு.........
அடுத்த மாசம் பேப்பர பாத்தா
போதும் தானே எண்டு.
வேற என்ன செய்யலாம் ?
சுத்தத் தமிழ் மூலம் உரையாடல்
எண்டு போட்டி நிகழ்ச்சி ஏதாவது
நடத்துவமே........
சீ........... அதில நானே
தட்டுப்பட்டிருவன் பிறகு பெரிய
மானக் கேடாப் போயிரும்.
அதுவும் வேண்டாம்
அப்ப என்ன தான் செய்யலாம்?
தமிழ் வழக்கோணுமே............
ஓ..... சினிமா படத்துக்கு தமிழ் பேர்
வைக்க சொல்லி சொல்லுவமோ....
இது நல்ல ஐடியா பாருங்கோ.......



## அட்டா புல்லரிக்குது

The Merit of Ascetics **தினம் ஒரு திருக்குறள்** *நீத்தார் பெருமை*

The small the paths of ease pursue 26
The great achieve things rare to do.
*செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்*


*For all your Printing needs*


**VIVEKA**

. அரங்கேற்ற அழைப்பிதழ்கள்
. திருமண அழைப்பிதழ்கள்
. விழா மலர்கள்
ஆகியவற்றை தரமாகவும்,
மலிவாகவும் பெற்றுக்கொள்ள
நீங்கள் நாடவேண்டிய
ஒரே இடம்

www.viveka.com
E-mail:info@viveka.com
(416) 410-6401
80 Barbados Blvd. Unit 4 Scarborough , ON




டாக்டர் ஜெயவதனி பாலகுமார்
குடும்ப பல்வைத்தியர்
**Dr. Jayawathany Balakumar**
**Family Dentist**

| Scarborough | Markham |
|---|---|
| Alton Tower Dental Office | Raymer Ville Dental Office |
| 240 Alton Towers Circle<br>suite 206<br>Scarborough<br>Off: 416•297•7078<br>Cell: 416•889•3244 | 1 Raymerville Dr.<br>Unit 5<br>Markham<br>(off McCowan. North of HWY. 7)<br>call 416.889.3244 |

# மரண அறிவித்தல்

மண்ணுலகில்
10 யூலை 1981



விண்ணுலகில்
22 ஏப்பிரல் 2005

## செல்வி
## கார்த்திகா சண்முகநாதன்

யாழ் நெடுந்தீவைப் பிறப்பிடமாகவும் இந்தியா திருச்சியில் வசித்து வந்ததவருமான செல்வி கார்த்திகா சண்முகநாதன் அவர்கள், 22.04.2005 அன்று திருச்சியில் அகால மரணமானார்.

அன்னார் சண்முகநாதன் - பத்தமராணி (தவம்) தம்பதிகளின் அன்புப் புதல்வியும், கவிதா (வன்கூவர், கனடா), ராகுலன், தேவானந்தன் ஆகியோரின் அன்புச் சகோதரியும், நாவரசன் (வன்கூவர், கனடா) அவர்களின் அன்பு மைத்தினியும், வைத்தியநாதன்-கோமளம், காலம் சென்றவர்களான சின்னத்தம்பி-நாகமுத்து தம்பதிகளின் அன்புப் பேத்தியும், லோகநாதன் ஆசிரியர் (ஜேர்மனி), கருணைநாதன் (மாலைதீவு), ஆகியோரின் அன்பு மருமகளும், காலம் சென்ற குகதாசன், சபாநேசன் (வவுனியா), ஆகியோரின் அன்புப் பெறாமகளும், நித்திலாவின் அன்புச் சித்தியுமாவார்.

அன்னாரின் இறுதிக்கிரியைகள் திருச்சியில் நடைபெறும்.
இவ் அறிவித்தலை உற்றார் உறவினர் நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

தொடர்புகளுக்கு:
கவிதா நாவரசன்: 604•321•6115
தட்சணாமூர்த்தி: 604•232•2919
ரூபன்: 416•834•6130
மதி: 416•892•0891


## மிகக் குறைந்த கட்டணத்தில் அதி கூடிய காப்புறுதி



Compare Our Guaranteed
10 Year Renewable Rates for your Self!

| AGE | $250,000 | | $500,000 | |
|---|---|---|---|---|
| | MALE | FEMALE | MALE | FEMALE |
| 35 | $12.60 | $10.80 | $23.85 | $18.45 |
| 40 | $17.43 | $14.18 | $31.50 | $23.85 |
| 45 | $25.65 | $19.35 | $42.50 | $31.95 |
| 50 | $37.58 | $27.45 | $61.25 | $45.90 |
| 55 | $50.31 | $38.93 | $96.25 | $66.94 |

NON SMOKER MONTHLY RATES MAY VARY DEPENDING ON HEALTH -RATES MAY CHANGE WITHOUT PRIOR NOTICE.
Source: LifeGuide December 2004

**பல முன்னணி காப்புறுதி நிறுவனங்களிடமிருந்து மிகக் குறைந்த கட்டணத்தில் உங்கள் காப்புறுதித் தேவைகளை பூர்த்தி செய்து கொள்ள அழையுங்கள்**

- வைத்திய பரிசோதனையற்ற காப்புறுதி (25yr - 80yr)
- பிரயாணக் காப்புறுதி (உடனடியாக தொலைபேசி மூலம் பெற்றுக்கொள்ளலாம்)
- RESP 20% அரச மானியத்துடன் 15% மேலதிக மானியமும் வழங்கப்படும்




**சிவா கந்தையா:**
**416 • 992 • 1259**
Off:416.315.8100 - Fax:416.750.3751

Insurance Broker
BAsp, CSC, CPH, CIFC

(Over 17 Years Canadian Banking & Financial Experience)

